
الزكوة والصدقة
கடமையாக்கப்பட்ட
தர்மமும்
நன்கொடையும்
டாக்டர் அல்ஹாஜ்
P.R.L. செய்யது அபூபக்கர் சாஹிபு
கீழக்கரை

*மௌலானா, மௌலவி.*

**P.S.P. ஜைனுல் ஆபிதீன்**

*(முன்னாள் முதல்வர்)*

***பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் அரபிக் கல்லூரி,***

**வேலூர், *அவர்களின்***

## மதிப்புரை

பிஸ்மி ஹி தஆலா வதபாரக் .

ஹாஜ்ஜுல் ஹரமைன் **டாக்டர் ஷைக் அபூபக்கர் சாஹிப்** *(தாமத்து பரகாதுஹும்)* அவர்கள் தொகுத்துள்ள 'அஜ்ஜகாத், வஸ்ஸதகா' எனும் நூலைப் பார்வையிட்டேன்.

நூல் அமைப்பில் சிறிதேயாயினும் அதனுள் அமைந்திருப்பவைகள் அகத்துள் வைத்து அமல் செய்யப் படத்தக்க அற்புதமான இஸ்லாமிய சட்ட முறைகளாகும்.

இறைவனும், அவனின் திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களும் வகுத்துத் தந்த கடமையான - கட்டாயமான 'ஜகாத்' எனும் ஏழை எளியோர்களுக்குச் செலுத்த வேண்டிய தர்மத்தை விட்டும், பரந்து விரிந்த பண்புடன் ஈவிரக்கத்தின் அடிப்படையில் ஈயப்படும் பொது தர்மத்தை விட்டும், விலகி வெகுதூரம் சென்று விட்டதின் நேரிடையான விளைவுதான் இன்றைய இஸ்லாமிய உலகத்தின் சரிந்த நிலையும், பொருளாதாரச் சீரழிவும் என்பதில் ஐயமில்லை.

ஏழைகளுக்குச் சேர வேண்டிய - அவர்களுக்குரிய 'ஜகாத்' எனும் கட்டாய வரி தமது பொருளுடன் சேர்த்துப் பிரிக்கப்படாமல் ஒதுக்கி வைக்கப்படாமல் இருத்தலுமாகும்.

'ஜகாத்'தைப் பெறத்தகுதியில்லாதவர், பொருளாசையின் காரணமாக அதைப்பெற்றுத் தான் சேமித்து வைத்திருக்கும்

மூலதனத்துடன் சேர்த்து, தன்னுடைய பொருளைப் பெருக்கிக் கொள்வது பெரும் பாவமான காரியமாகும். அதுமட்டு மல்ல பயங்கரமான நாசம் விளைவித்து பொருளையும் ஆட்கொண்டு, அழித் தொழித்து சின்னா பின்னமாக்கி ஒன்று மிலா வறியவனாக அவனை வாழ வைத்துவிடும் என்பது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நல்லுபதேசமாகும்.

ஆகவே இஸ்லாமிய அன்பர்கள் அனைவரும் படித்துப்பயன் பெற்று, ஈருலகிலும் ஈடேற்றம் பெறத்தக்க நல்ல பல முக்கியமான சட்ட நெறி முறைகளை விளக்கும் இன்நன்னூலைத் தொகுத்தளித்த செய்ஹுூ அபூபக்கர் சாகிபு அவர்களைப் பாராட்டுகிறேன்.

இது போன்ற பயனுள்ள பன்னூட்களை மேலும் படைத்தளித்துத்தர அல்லாஹ் கிருபை செய்வானாக என இறைஞ்சுகின்றேன். ஆமீன் அல்லாஹ் சுபுஹானஹுூ தஆலா ஏற்றருள்வானாக! ஆமீன்.

வஸ்ஸலாம்.

வேலூர் — *அன்புள்ள*

3.8.99 - 20.4.1420 — ஜைனுல் ஆபிதீன்

*மௌலானா, மௌலவி* **ஷப்பீர்அலி** *ஹஜ்ரத் முன்னாள் பிரின்ஸிபால் செய்யிது ஹமீதா அரபிக்கல்லூரி,*

**கீழக்கரை**

*இராமனாதபுரம் மாவட்டம் - (இந்தியா) அவர்களின்*

# மதிப்புரை

அல்ஹாஜ் **டாக்டர் செய்ஹு அபூபக்கர் சாஹிபு** அவர்கள் தொகுத்தெழுதிய அவர்களுடைய மூன்றாவது வெளியீடான 'அஜ்ஜகாத், வஸ்ஸதகா' என்ற நூல் என் பார்வைக்குத் தரப்பட்டுப் படித்தேன்.

இந்நூலில் ஷாபிஃ மத்ஹபின் சட்டப்படி ஜகாத்து விளக்கங்கள் குர்ஆன், ஹதீஸ்களின் ஆதாரப் பூர்வமாகத் தரப்பட்டுள்ளன. என்றாலும் ஆங்காங்கே ஹனபி மத்ஹப் சட்ட விளக்கங்களும் தெளிவாகத் தரப்பட்டுள்ளன.

ஜகாத் சம்பந்தப்பட்ட மஸாலாக்களைத் தெரிந்து கொள்வதற்கு இந்நூல் பெரிதும் உதவியாக இருப்ப தோடல்லாது ஜகாத் கொடுத்து வருபவர்களுக்குப் பெரிதும் தெளிவாகவும் உதவியாகவும் இருக்கும்.

அல்லாஹுத்தஆலா நூல் ஆசிரியருக்கு உடல் நலமும், பொருள் வளமும் தந்தருளி, மேலும் பல நல்ல நூல்களைப் படைத்திட பேரருள் புரிவானாகவும்!

ஜகாத்துப்பற்றி எழுதப்பட்டுள்ள இந்நூல் மக்களுக்கு மிகவும் அவசியமானதாகும். ஆலீம்களைப் போல் மார்க்க விவரங்கள் அலசுவதில் நூல் ஆசிரியர் ஆர்வமுள்ளவரா

வார்கள். இந்நூல் ஆசிரியர் எழுத்துலகிற்குப் புதியவரல்ல. இதற்கு முன் 1. நாற்பது நபி மொழிகள் (2) திருக்குர்ஆன் ஹதீஸ் வழங்கும் துஆக்கள்" என்ற நூல்களைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் படைத்துத் தந்த பண்பாளர் ஆவார்.

நூலாசிரியரின் மூன்றாவது வெளியீடான 'அஜ்ஜகாத் வஸ்ஸதகா' என்ற நல்நூலை சமூகத்திற்கு மிகவும் தேவையான நேரத்தில் வெளியிட்டுள்ளார்கள். நூல் ஆசிரியர் அவருடைய தொழில் நிறுவனங்கள் பலதிலும் பெரும் பொறுப்பில் இருந்து கொண்டு தனது நேரத்தின் பெரும்பகுதியை சமூகத்திற்குப் பயனுள்ள இப்பணியில் ஈடுபட்டு நல்லபல பயனுள்ள நூல்களைத் தந்திருப்பது, அவரின் மார்க்க சம்பந்தமான ஆழமான அனுபவத்தையும் அபரிமிதமான ஆர்வத்தையும் காட்டுகிறது.

*வஸ்ஸலாம்*

**ஷப்பீர் அலி**

*ஸைபுல் மில்லத், மௌலானா, மௌலவி, ஹாபிஸ், அல்ஹாஜ்* A.R. **முஹம்மது சுலைமான்,** M.A.

(AL-AZHAR, CAIRO.) ஹாங்காங் அவர்களின்

# மன மகிழ் மதிப்புரை

சர்வ புகழும் அல்லாஹ்விற்கே! "ஸலாத்" என்னும் கருணையும், ''ஸலாம்'' என்னும் ஈடேற்றமும் எம் பெருமானார் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீதும் அவர் கள் தம் கிளையார்கள் மீதும், தோழர் குழுவினர்கள் மீதும், அனைத்துலக முஸ்லிம்கள் மீதும் உண்டாவதாக! ஆமீன்.

*அபுல் இல்ம்-''கல்வியின் தந்தை'' அய்னுல் உலமா:-"அறிஞர்களின் கண்" என்று போற்றப்படும் புகழுக் குரிய டாக்டர், அல்ஹாஜ்* **P.R.L. ஷேக் அபூபக்ர் சாஹிப்** அவர்கள் தங்களின் மூன்றாவது படைப்பாக "அஜ்ஜகாத்து வஸ்ஸதகா" யென்ற இந்நூலை வெளியிட்டுள்ளார்கள்.

ஜக்காத்து என்றால் செல்வத்திற்கு மட்டுமல்ல. நமது உபயோகத்திலுள்ள ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற கால் நடைகளுக்கும், தானிய வகைகளுக்கும், சொத்து வகைகளுக்கும் ஜகாத்து கொடுக்க வேண்டுமென்பதை ஆதாரத்தோடு அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

இந்நூலைப் படைக்க ஹாஜியார் அவர்கள் பெரும்முயற்சியை நீண்டநாட்களாகத் தொடுத்திருக்க வேண்டும். காரணம் இந்தத் தலையங்கத்தில் ஒருநூலை தொகுப்பது எளிதான காரியமல்ல. மற்ற இதரத்

தலையங்கத்திற்கு ஏராளமாக ஆயத்துகளும். ஹதீஸ்களும். ஆதாரங்களும் கிடைத்து விடும். ஆனால் "ஜகாத்" என்பதற்கு மட்டும் காரணம், கணக்கு, காலம் கொடுப்பவரின் நிலை, அதைப் பெறுவதற்குத் தகுதியானவர்கள் -அனைத்தையும் குறிப்பிட்டு எழுத வேண்டியக் கட்டாயப் பட்டவர்களாக இருக்கிறோம். இவையனைத்தையும் ஹாஜியார் அவர்கள் சிரமமெடுத்து, தொகுத்திருப்பதைப் பார்க்கும்போது எனக்கு மிகவும் ஆச்சரியமாகவே இருக்கின்றது.

சுமார் 30 ஆண்டுகளுக்குமுன் எனது மாமனார் மௌலானா யூசுப் பாகவி (ரஹ்) அவர்களால் எனக்கு அறிமுகப் படுத்தப்பட்ட ஹாஜியார் அவர்களின் எளிமையான நடையும், இனிமையானப் பேச்சும், யாராகயிருந்தாலும் தானாகவே முன்வந்து அவர்கள் செய்கின்ற உதவியும், சிறியவர் முதல் பெரியவர்கள் வரை அனைவர்களிடமும் பழகிவருகின்ற மரியாதையும், பொதுத் தொண்டில் முதன்மையாக வந்து நின்று புரிகின்ற சேவையும், குறிப்பாக உலமாக்களைக் கண்டால் தன் குடும்ப உறவினர்களைப் போன்று அவர்களோடு ஒட்டி உறவாடி, சிரித்துப் பேசி மகிழ்வடைகின்ற அவர்களின் குழந்தை உள்ளத்தையும் என் ஆயுள் முழுதும் நான் மறக்க முடியாது.

ஒரே ஒரு வியாபாரத்தைச் செய்து உருப்படியாக கொஞ்சம் செல்வத்தை சம்பாதித்து விட்டால் உறவினர்களைக்கூட நெருங்காமல் வாழ்கின்ற இக்காலத்தில். உலக முழுவதும் வணிகம் பல செய்து தனது மாபெரும் ஸ்தாபனங்கள் பலதையும் உருவாக்கிப் பணிபுரிந்து வரும்

ஹாஜியார் அவர்கள் மார்க்கக் கடமையிலும், சேவையிலும் தொய்வின்றி, தோய்வின்றி ஆற்றிவரும் பணியை என்னால் புகழாதிருக்க முடியவில்லை.

மேலும் இந்நூலுக்குத் திருத்தங்கள் செய்து, மதிப்புரையும் வழங்கியுள்ள எனது ஆசிரியப் பெருந்தகை மௌலானா, மௌலவி, ஷைகுத் தப்ஸீர் **P.S.P. ஜைனுல் ஆபிதீன்** ஹஜ்ரத் கிப்லா அவர்களாலும் இந்நூல் சிறப்புப் பெற்றுள்ளது.

வல்ல ரஹ்மான் ஹாஜியார் அவர்களின் முயற்சியை கபூல் செய்து, அவர்களுக்கும், நம் அனைவர்களுக்கும் நீண்ட ஆயுளையும், நல்லபல சேவைகளை மக்களுக்குச் செய்திடவும் நல்லருள் புரிவானாக! ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்.

ம அஸ்ஸலாம்,
**A.R. முஹம்மது சுலைமான்**
ஹாங்காங்.
10-06-2000

*ஹாபிஸ்* **ஷுஐபு நூஹூ**, *மஹ்ழரி, துணை இமாம்,*
***கவ்லூன் மஸ்ஜித்,*** *TST* ***ஹாங்காங்*** *அவர்களின்*

# மதிப்புரை

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய எல்லாம் வல்ல அல்லாஹ்வின் திவ்விய நாமம் கூறி...........

காரிருளை நீக்க வந்த கனகமணி இரத்தினம் காருண்ய நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறி ஆரம்பம்.

''திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'' எனும் வார்த்தைகளுக்கு ஒப்ப பல மைல்களுக்கு அப்பாற்வந்து திரவியம் தேடி, அத்துடன் தீன், துன்யா இவ்விரண்டும் "சமுதாயத்தின் கண்கள்". இவ்விரண்டையும் இச்சமுதாயம் முறையாக பெற்றாக வேண்டும் என்ற உயரிய நோக்கத்தில் பேங்காக் மாநகரில் தமிழ் முஸ்லிம் சங்கத்தை நிறுவி என்னென்ன வணக்கங்கள் நடக்க வேண்டுமோ அத்தனையையும் முறைப்படுத்திய நெறியாளர், பண்பாளர், எளியவர்களையும் அரவணைக்கும் அன்பாளர், அல்ஹாஜ் டாக்டர் PRL **அபூபக்கர்** அவர்கள். அன்னவர்கள் இந்த சமுதாயத்திற்கு ஆற்றி இருக்கும் தொண்டுகள் பல.

தற்போது தாங்கள் கரங்களில் மிளிரும் இச்சட்டக் கருவூலம் கூட ஆசிரியரின் எழுத்துப் பணிகளில் ஒரு மைல் கல்.

அண்ணலம் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் மூலம் சிறப்புக்குரியவர்கள். பின்பற்ற தகுந்தவர்கள் என்று புகழ்ந்து கூறப்பட்ட சான்றோர்களான இமாம்கள், அருள்மறை திருக்குர்ஆனின் மூலமும், கண்மணி நாயகம் (ஸல்) அவர்களின் வாக்குகள் மூலமும் அமைத்துதந்த வழிமுறைதான் மத்ஹபுகள், அதன் அடிப்படையில் உருவாக்கிய இச்சட்டக் கருவூலம் படித்து பயன்பெற, வாழ்க்கையில் நடைமுறைக்கு கொண்டு வரப்பட வேண்டிய ஒன்று. ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டிய சட்ட துணைவன். இதில் அமைந்துள்ள சட்டங்களை யானும் படித்தேன். நுட்பமான சட்டங்களும் இதில் அடக்கம்.

இது போன்ற வெளியீடுகள் இச்சமுதாயத்திற்கு ஆசிரியரவர்கள் மீண்டும் மீண்டும் சமர்ப்பிக்க எல்லாம்வல்ல அல்லாஹ் துணை நிற்பானாக! ஆமீன்.

யா அல்லாஹ் சன்மார்க்க ஷரீஅத்துக் கலையிலும், ஏனைய கலைகளிலும் அறிவு வளர்ச்சி பெற்று, நற்கிரியைகள் புரிந்து உன்னருட் சொர்க்கம் புரிந்த நல்லவர்களுடன் எங்களை நீ ஆக்கி அருள்வாயாக ஆமீன்.

*வஸ்ஸலாம்*

**ஷுஐபு நூஹு**
03-07-2000

# முகவுரை

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۞

نَحْمَدُهٗ وَنُصَلِّيْ عَلٰى رَسُوْلِهِ الْكَرِيْمِ ۞

بَلَغَ الْعُلٰى بِكَمَالِهٖ ۞ كَشَفَ الدُّجٰى بِجَمَالِهٖ ۞

حَسُنَتْ جَمِيْعُ خِصَالِهٖ ۞ صَلُّوْا عَلَيْهِ وَاٰلِهٖ ۞

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய எல்லாம் வல்ல அல்லாஹ்வின் திரு நாமம் முன்னிருத்தி என்னுரையை ஆரம்பிக்கின்றேன்.

எல்லாப் புகழும் எல்லாம் வல்ல இறைவனுக்கே! அவனுடைய திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்கள் தம் கிளையார்கள், தோழர்கள், அனைத்துலக முஸ்லிம்கள் மீதும் சாந்தியும் சமாதானமும் என்றென்றும் உண்டாவதாக!

அல்லாஹ¤த் தஆலா, தனது திருமறையாம் குர்ஆன் ஷரீபில் எந்தெந்த இடத்தில் தொழுகையைப் பற்றி வலியுறுத்தி வருகிறானோ அதையடுத்தே அந்தந்த இடத்தில் ஜகாத்தையும் வலியுறுத்திக் கூறிவருகிறான். நம் முஸ்லிம் சகோதர சகோதரிகள் தொழுகையைப் பற்றி எந்த அளவுக்குத் தெரிந்து அமல் செய்து வருகிறார்களோ அந்த அளவுக்கு ஜகாத்தையும் தெரிந்து அமல்படுத்தி வரவேண்டுமென்ற எனது ஆழ்ந்த ஆசையின் பலன்தான் இன்று உங்கள் கரங்களில் மலர்ந்திருக்கும்

# اَلـزَّكٰوةُ وَالصَّدَقَةُ

"கடமையாக்கப்பட்ட தருமமும் நன்கொடையும்" என்ற சிறு நூலாகும்.

தொழுகையைப் போலவே ஜகாத்தும் ( فَرْض عَيْن ) கட்டாயக் கடமையாகும். தொழுகையை விட்டவருக்கு அல்லாஹ்விடத்தில் எப்படி தண்டனையுண்டோ அதுபோலவே ஜகாத்துக் கொடுப்பதற்குக் கடமை ஆக்கப்பட்டு ஜகாத்துக் கொடுக்காதவருக்கும் அல்லாஹ்விடத்தில் தண்டனையுண்டு என்பதை வாசகர்கள் மனதில் இருத்திக் கொள்வார்களாக!

மேலும் நாயகம் (ஸல்) அவர்கள் கீழ் கண்ட ஹதீஸில் கூறுவதைச் சற்று சீர்தூக்கிப் பார்ப்பீர்களாக

لَا اِيْمَانَ لِمَنْ لَا صَلٰوةَ لَهُ
لَاصَلٰوةَ لِمَنْ لَا زَكٰوةَ لَهُ

அதாவது யாரிடம் தொழுகை இல்லையோ அன்னவரிடம் ஈமான் கிடையாது. யாரிடம் ஜகாத்துக் கடமையாகியும் ஜகாத்து கொடுக்கும் பழக்க மில்லையோ அவரிடம் தொழுகை கிடையாது என்பதாகும். பொதுவாக நமது சமுதாயத்தில் பெரிய செல்வந்தர்களைப் பொருத்த மட்டிலும் பெரும் மனத்தோடு ஜகாத்து என்ற பெயரில் ஜனங்களை ஜாதி மத பேத மின்றி ஓர் இடத்தில் அடைத்து வைத்துக் கொடுக்கிறார்கள். அப்படிக் கொடுக்கும்போது அவர்கள் கொடுக்கும் தொகையில் பாதிகூட அல்லாஹுத் தஆலா சொன்ன நபர்களுக்குச் சென்றடைகிறதா? என்று பார்க்கும் போது, பாதிக்கும்

குறைவாகவே சென்றடைகிறது என்று சொல்லலாம். ஆகவே ஜனங்களை அடைத்துப் போட்டு ஜகாத்துக் கொடுக்கும் பெருந்தகைகள் அல்லாஹுத் தஆலாவின் ஜகாத்து விஷயத்தில் கூறும் விதிகளையும் அனுசரித்து அவர்களுடைய ஜகாத்துத் தொகையைக் கொடுப்பார்களேயானால் அவர்கள் கொடுக்கும் தொகை பூராவும் ஜகாத்தாக நிறைவேறி விடுமென்பதை சிந்திப்பார்களாக!

ஜகாத்து, ஸதக்கா, ஸதக்கத்துல் ஃபித்ர், நபகா, இவைகள் யாவும் பெரும்பாலும் குர்ஆனிலும் ஹதீது சரீபுகளிலும் ஆங்காங்கே காணக்கிடக்கின்றன, ஆனால், குர்ஆன், ஹதீதுகள் யாவும் அரபி மொழியிலேயே பெரும்பாலும் இருப்பதாலும் ஆங்காங்கு காணக்கிடைப்பதாலும், அவைகளை யெல்லாம் ஒரே கிரந்தத்தில் தமிழில் வெளியிட்டால் எம் போன்ற தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கு மிகவும் பிரயோஜனமாகவும், ஜகாத்துக் கொடுப்பவர்களுக்கு உதவியாகவும் இருக்குமே என்ற நோக்கத்திலேயே இந்நூலை தமிழில் நான் வெளியிடுகிறேன்.

பெரும்பாலும் திருக்குர்ஆன், அல் ஸஹீஹுல் புஹாரி, திர்மதி, மற்றும் முக்கிய இஸ்லாமிய சட்ட நூல்களிலிருந்தும் எடுத்தெழுதியுள்ளேன். நான் எழுயதோடு நின்று விடாமல் இந்நூலை மார்க்க மேதைகளான மௌலானா மவுலவி வேலூர் பாக்கியாத்துஸ்ஸாலிஹாத் அரபிக் கல்லூரியின் முன்னாள் பிரின்ஸிபால், ஜைனுல் ஆபிதீன் ஹஸரத் அவர்கள், கீழக்கரை செய்யது ஹமீதா அரபிக்கல்லூரி முன்னாள் பிரின்ஸிபால், மௌலானா மௌலவி

ஷப்பீர் அலி ஹஸரத் அவர்கள், ஹாங்காங் கவ்லூன் பள்ளியின் முன்னாள் இமாம், மௌலானா மௌலவி ஹாபிஸ் சுலைமான் ஹஸரத் முதலானவர்களின் பார்வைக்கு அனுப்பி அவர்கள் திருத்தியும் தந்துள்ளனர். அவர்கள் தந்த சிறப்புரைகளும் இந்நூலில் காணக்கிடைக்கின்றன.

இந்நூலை வெளியிடுவதில் மக்களிடமிருந்து எவ்விதக் கூலியையும் எதிர்பார்க்காமல், அல்லாஹ்விடமிருந்து இன்ஷா அல்லாஹ், இத் தொண்டுக்குப் பெரும் பாக்கியம் கிடைக்குமென்று ஆதரவு வைத்து இதை இலவச வெளியீடாகவே வெளியிடுகின்றேன்.

எனது இச்சிறிய முயற்சியில் மேற் சொன்ன மௌலானா மௌலவி ஜைனுல் ஆபிதீன் ஹஸரத் அவர்கள், மௌலானா மௌலவி ஷப்பீர் அலி ஹஸரத் அவர்கள், ஹாபிஸ் சுலைமான் ஹஸரத் அவர்கள், மாஹின் பிரிண்டர்ஸ் உரிமையாளர்கள் அனைவரும் தங்களுடைய பொன்னான நேரத்தையும், சிரமத்தையும் பொருட்படுத்தாது, இத்தொண்டிற்கு உதவியமைக்கு எனது மனமார்ந்த நன்றியைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

இந்நூலை படிக்கும் வாய்ப்புப் பெற்ற சகோதர சகோதரிகள் உங்களுடைய வணக்கத்தின் போது இச்சிறியோன், எனது மனைவி, மக்கள், குடும்பத்தார், இம்முயற்சியில் உதவிய அனைவர்கள் ஹக்கிலும் துஆச் செய்து கொள்ளுமாறு பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்

யா அல்லாஹ்! மேற் சொன்ன மௌலவி மார்களும் சரியே, இச்சிறியோனும் சரியே, மாஹின்

பிரிண்டர்ஸ் உரிமையாளர்களும் சரியே, எல்லோருமே உன்னுடைய படைப்பில் மானிடர்கள்தான் ( إِنْسَانٌ ) ஆகவே எங்களையும் அறியாது ஏதும் சிறிய தவறோ, விடுதலோ, அச்சுப்பிழையோ ஏற்பட்டிருப்பின் அதற்காக குற்றம் பிடிக்காது உனது கருணை கடாச்சத்தால் எங்களை மன்னித்து இச்சிறு சேவையை ஏற்றுக் கொள்வாயாக! ஆமீன்.

இச்சேவையை உனது ஹபீபும் எனது உயிரினும் மேலான எனது வழி காட்டியுமான இரசூலே கரீம் முஹம்மது (ஸல்) அவர்களின் ஞாபகார்த்தமாக சமர்ப்பிக்கின்றேன்.

வஸ்ஸலாம்

**P.R.L. செய்ஹு அபூபக்கர் சாஹிபு**
**தாளாளர்,**
**செய்யது ஹமீதா அரபிக்கல்லூரி**
கீழக்கரை.
இராமநாதபுரம் மாவட்டம்.
**தமிழ்நாடு, இந்தியா.**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ○

# اَلزَّكٰوةُ وَالصَّدَقَةُ

## கடமையாக்கப்பட்ட தர்மமும் நன்கொடையும்

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ، وَالصَّلٰوةُ
وَالسَّلَامُ عَلٰى اَشْرَفِ الْمُرْسَلِيْنَ ،
وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ ○
اَمَّا بَعْدُ قَالَ اللّٰهُ تَعَالٰى فِى الْقُرْاٰنِ الْكَرِيْمِ
وَاَقِيْمُوا الصَّلٰوةَ وَاٰتُوا الزَّكٰوةَ وَارْكَعُوْا
مَعَ الرّٰكِعِيْنَ ○ ٢:٤٣

***தமிழாக்கம்:-***

*மேலும், நீங்கள் தொழுகையைக் கடைபிடித் தொழுகுங்கள்; ஜகாத்தும் (மார்க்கவரி) கொடுத்து வாருங்கள்; தொழுகையில் (ஒன்று சேர்ந்து குனிந்து) ருகூஉ செய்பவர்களுடன் நீங்களும் (குனிந்து) ருகூஉ செய்யுங்கள்.*

قَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ :
اِنَّ اللّٰهَ افْتَرَضَ عَلَيْهِمْ صَدَقَةً
فِيْ اَمْوَالِهِمْ تُؤْخَذُ مِنْ اَغْنِيَاءِهِمْ
وَتُرَدُّ فِيْ فُقَرَائِهِمْ (بُخَارِي)

***தமிழாக்கம்:-***

ஹஸரத் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்: "நிச்சயமாக அல்லாஹ் அவர்களின் பொருள்களில் அவர்கள் மீது ஜகாத்தைக் கடமையாக்கியுள்ளான். அதைப் பணமுள்ளவர்களிடம் வசூலித்து, ஏழை, எளியோர்களுக்கு வினியோகம் செய்யப்படும்.

நோன்பும் ஜகாத்தும் ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டில் தான் கடமையாக்கப்பட்டன. ஜகாத்துக் கொடுக்க மறுத்தவர்கள் ஷரீஅத் கோர்ட்டில் சாட்சியம் கூறக்கூட தகுதியற்றவர்களாகப் பிரகடனப் படுத்தப்பட்ட தோடல்லாது அவர்களுடன் போர் தொடுக்க வேண்டுமென்றும் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களால் பிரகடனமும் செய்யப்பட்ட தென்றால் ஜகாத்து எவ்வளவு முக்கியக்கடமையாக நம்மீது விதிக்கப்பட்டிருக்கிற தென்பதை முஸ்லிம்களாகிய நாம் சிந்திக்க வேண்டிய விஷயமாகும்.

ஜகாத்து இஸ்லா மென்னும் கோட்டையிலுள்ள (ஐந்து கடமை) ஐந்து தூண்களில் நடுத்தூணாகும். (மூன்றாவது கடமையாகும்) அது நமக்குள் தர்ம உணர்வு வசீகர மனப்பாண்மை, சகல முஸ்லிம்களிடையேயும் தொடர்பு, பொருளாதார ஏற்ற தாழ்வை சமநிலை செய்தல், ஏழ்மையைப் போக்குதல் ஆகிய நற்பலன்களையும் உண்டாக்குகிறது. உலக ஆசை என்ற பந்தத்திலிருந்து மனிதனையும், சமூகத்தையும் சுத்தப்படுத்தும் ஓர் மாமருந்தாகவும் இருக்கிறது.

***ஜகாத்து:-***

*ஜகாத்தின் வெளிப்படையான பொருள்:- (1) பரிசுத்தம் செய்தல் (2) வளர்ச்சி பெறுதல் அதாவது நமது பொருளாதாரத்திலிருந்து ஜகாத்தைப் பிரித்து உரியவர்களுக்குக் கொடுத்து விட்டால், பாக்கிப் பொருள் பரிசுத்தமும் சிறப்பும் அடைவதாக நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். மேலும் அவர்களுடைய உள்ளமும் பரிசுத்தத் தன்மை அடைவதாகவும் கூறுகிறார்கள்.*

**பொருளாதாரம் பரிசுத்தமடைகிறது என்பதற்கு அல்லாஹுத் தஆலா தன்னுடைய திருமறையில் கீழ்கண்டபடி கூறுகிறான்.**

***(9-103)***

خُذْ مِنْ اَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ
وَتُزَكِّيْهِمْ بِهَا وَصَلِّ عَلَيْهِمْ
اِنَّ صَلٰوتَكَ سَكَنٌ لَّهُمْ وَاللّٰهُ سَمِيْعٌ
عَلِيْمٌ ۝ ٩:١٠٣

***தமிழாக்கம்:***

*நபியே! அவர்களுடைய பொருளை தானமாக நீர் எடுத்துக் கொண்டு அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து, அதைக் கொண்டு அவர்களைத் தூய்மைப் படுத்தி, அவர்களை ஆசீர்வதிப்பீராக! உம்முடைய ஆசீர்வாதம் நிச்சயமாக அவர்களுக்கு ஆறுதலளிக்கும். அல்லாஹ் செவியுறு வோனும் மிக்க அறிவோனுமாக இருக்கிறான்.*

***(9-103)***

**பொருளாதாரம் வளர்ச்சியடையும் என்பதற்கும் வட்டியை அழிப்பேன் என்பதற்கும் அல்லாஹுத் தஆலா கீழ்கண்ட திருமறை வசனத்தில் கூறுவதாவது:**

يَمْحَقُ اللّٰهُ الرِّبٰوا وَيُرْبِي الصَّدَقٰتِ
وَاللّٰهُ لَا يُحِبُّ كُلَّ كَفَّارٍ اَثِيْمٍ ۝ ٢:٢٧٦

***தமிழாக்கம்:-***

*அல்லாஹுத் தஆலா வட்டியை ஒழித்துக்கட்டி, தானங்களைப் பெறுக்குகின்றான். (தன் கட்டளையை) நிராகரித்துக் கொண்டிருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.*

***(2:276)***

مَا خَالَطَتِ الزَّكٰوةُ مَالًا قَطُّ اِلَّا اَهْلَكَتْهُ

( رواه الشَّافِعِيُّ وَالْبُخَارِيُّ )

***தமிழாக்கம்:-***

*ஏழை வரி (ஜகாத்து) சொத்தில் கலப்பது அச்சொத்தின் அழிவிற்கன்றி வேறில்லை யென நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.*

## ஜகாத்திற்கும், சதக்காவிற்கும் உள்ள வித்தியாசம்

قَالَ رَسُوْلُ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ :
بُنِيَ الْاِسْلَامُ عَلٰى خَمْسٍ : شَهَادَةِ
اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ
اللّٰهِ وَاِقَامِ الصَّلٰوةِ ، وَاِيْتَاءِ الزَّكٰوةِ
وَحَجِّ الْبَيْتِ وَصَوْمِ رَمَضَانَ (مُتَّفَقٌ عَلَيْه)

***தமிழாக்கம்:***

*நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:-*

*இஸ்லாம் ஐந்து அடிப்படைகளில் நிறுவப் பட்டுள்ளது. (1)* வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் கிடையாது என்றும், முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியார் (தூதர்) என்றும் சாட்சியம் கூறல் *(2)* தொழுகையை நிலை நாட்டுதல் *(3)* ஜகாத் என்னும் ஏழை வரியைக் கொடுத்தல் *(4)* கஃபாவை நாடி ஹஜ்ஜு செய்தல் *(5)* ரமலான் மாதம் நோன்பு நோற்றல்.

மேற்கூறிய ஹதீஸினின்றும் இஸ்லாம் என்னும் கோட்டைக்கு 'ஜகாத்தை' நடுத்தூணாக நாயகம் (ஸல்) அவர்கள் கூறும் போது ஜகாத்துக் கொடுப்பது எவ்வளவு அத்தியாவசியக் கடமை என்பதை வாசகர்கள் சற்றுச் சிந்தனைக்கு எடுத்துக் கொள்வீர்களாக.

## ஜகாத்துக் கொடுக்கத்தகுதியற்ற நபர்கள்:

1. முஸ்லிமல்லாதார்

2. பைத்தியக்காரர்கள். பைத்தியம் தொடர்ந்து ஒருவருடமாக பைத்தியமாக இருப்பவர் (ஹனபி மத்கப்) அந்தப் பைத்தியக் காரருக்கு தனிப்பொருள் இருந்து வந்தால் அவர் பெயரில் நிய்யத்து வைத்து அவருடைய பொருப்பாளர்கள் ஜகாத்தைக் கொடுக்க வேண்டும் (ஷாபி மத்கப்)

3. கடனாளிகள் (ஷாபிமத்ஹப்) நிஸாப் (نِصَاب) முழுவதையும் கடனை அடைத்துக் கொள்ளவும்.

4. அடிமைகள்.

5. வயது வராத சிறுபிள்ளைகள். ஆனால் அவர்களுக்குத் தனிப் பொருள் இருக்கும் பட்சத்தில் அச்சிறுவர் பேரில் நிய்யத்து வைத்து அச்சிறுவரின் ஜகாத்து கொடுத்து விடவேண்டும் (ஷாபி-மத்ஹப்).

## ஜகாத்துக்குத் தகுதியற்ற பொருள்கள்

1. எத்தனை கட்டிடங்கள் இருந்தாலும் அவைகளுக்கு ஜகாத்துக் கிடையாது. ஆனால் அவைகளிலிருந்து வரும் வாடகை ஒருவருடம் கையில் இருந்து நிஸாப் (نِصَاب) எட்டி இருந்தால் அந்த வாடகைக்கு ஜகாத் உண்டு.)

2. நமது உபயோகத்திற்குத் தேவையான உணவு தானியங்கள்.

3. நமது உபயோகத்திற்குள்ள துணிமணிகள்

4. வாடகைக்கு விடப்பட்ட கடைகளும் ஆபீஸ்களும். ஆனால் அதிலிருந்து வரும் வாடகை நிஸாபை (نِصَاب) எட்டியிருந்து ஒருவருடம் கையில்

இருந்துவந்தால் அதற்கு ஜகாத்து உண்டு. ஒருவருடத்தின் இடைக்காலங்களில் கிடைத்தவை களுக்கு தனியான கணக்கில்லையென்றால் அவை அனைத்தும் ஓராண்டின் கணக்கில் சேர்க்கப்படும். வருடத்தின் ஆரம்பம், இறுதி இவ்விருநேரங்களிலும் கையில் இருந்து வருவதே போதும்.

5. வயல்கள் எத்தனை இருந்தாலும் அவைகளுக்கு ஜகாத்துக் கிடையாது. ஆனால் அவைகளிலிருந்து விளையும் பொருள்களில் பத்தில் ஒன்று (1/10) (عُشْر) "உஷ்ரு" ஜகாத்தாகக் கொடுக்கப்பட வேண்டும். பத்தில் ஒருபாகம் என்பது விவசாயம் எவ்வித சிலவுமின்றி, மழை, குளம், குட்டை, கண்மாய் போன்ற நீர்நிலைகளின் மூலம் நீர் பெற்று விளைந்த சமயத்தில் தான். ஆனால் விவசாயத்திற்குரிய நீருக்காகப்பணம் செலவு செய்து அதன் மூலம் விளையும் விளைச்சலில் (1/20) இருபதில் ஒன்று ஜகாத்தாகக் கொடுத்தால் போதும். அவ்விளைச்சல் பொருள் நிசாபை (نِصَاب) எட்டியிருக்க வேண்டும். ஒரு வருடம் கையில் இருந்திருக்க வேண்டும்.

6. இயந்திரங்கள் டெக்னிகல் மிஸினரி (Technical Machinery)

7. சவாரி செய்யும் சொந்த உபயோகத்திற்குட்பட்ட வாகனங்கள். ஆனால் வியாபார நோக்கத்துடன், வாடகைக்கு அவைகள் விடப்பட்டால் அந்த வாடகை (نِصَاب) நிசாபை எட்டி ஒரு வருடம் கையில் இருந்து வந்தால் அவைகளுக்கும் ஜகாத்து உண்டு. (உதாரணம் கார், வேன், லாரி, குதிரை, ஒட்டகம், மாடு, படகு, ஆட்டோ முதலியவைகள்)

8. நிஸாபு (نِصَاب) குறிப்பிட்ட அளவை எட்டிய பணம்.

9. ரத்தினம், தங்கம், வெள்ளி முதலியவை நீங்க ளாகவுள்ள மற்ற உலோகங்களுக்கும், அவைகளால் செய்யப்பட்ட நகைகளுக்கும் ஜகாத்து கிடையாது.

10. திருமணம் போன்ற வீட்டு வைபவங்களுக்கு வாங்கப்பட்ட தானியம் மற்றும் மிஞ்சியப் பொருள்களை விற்றாலும் அவைகளுக்கு ஜகாத்துக் கிடையாது. ஆனால் மேற் கூறப்பட்ட 10வது குறிப்பீடு களிலுள்ளவைகளை வியாபார நோக்கத்துடன் வாங்கப்பட்டதாகவோ விற்கப்பட்டதாகவோ இருக்கக் கூடாது. அப்படி இருக்கும் பட்சத்தில் அவைகளுக்கும் ஜகாத்து உண்டு.

ஜகாத்துத் தொகையை அல்லாஹுத் தஆலா தனது திருமறையில் கூறியுள்ள நபர்களுக்கு மட்டிலுமே கொடுக்கவேண்டும். அப்படியல்லாமல் நமக்கு வேண்டிய விருப்பப்படி யெல்லாம் கொடுத்து விட்டு, ஜகாத்துக் கொடுத்து விட்டதாக நினைத்துக் கொண்டால் (அது) நம்முடைய ஜகாத்து நிறைவேறியதாக ஆகாது.

## ஜகாத்தின் விபரம்

ஒரு நபரிடம் ரொக்கம், நகை, பாத்திரம் முதலியவைகள் கடனுக்கு மேல் மிச்சமாகவும், குறிப்பிட்ட அளவை (نِصَاب) எட்டியும் ஒருவருட காலத்திற்கு இருந்து வந்தால் அதில் குறிப்பிட்ட நூற்றிற்கு இரண்டரை (2½) விழுக்காடை அல்லாஹுத் தஆலா தனது திருமறையில் குறிப்பிட்ட நபர்களுக்குச் சொந்தமாகக் கொடுக்க வேண்டும். குறிப்பிட்ட அளவு (نِصَاب) என்பது தற்காலத்தில் நம் நாட்டு அளவுப்படி ஏழரை (7½) தோலா தங்கமோ அல்லது ஐம்பத்து இரண்டரை (52½) தோலா வெள்ளியோ அதாவது

எண்பத்தி ஏழரை (87½) கிராம் தங்கமோ அல்லது அறுநூற்று பன்னிரெண்டரை (612½) கிராம் வெள்ளியோ ஆகும். அல்லது அவைகளுக்குச் சமமதிப்புள்ள பணமோ ஒருவருடத்திற்கு மேல் கையில் அளவை (نِصَاب) எட்டி இருக்கும் பட்சத்தில் அவைகளினின்றும் (2½) இரண்டரை விழுக்காடைப் பிரித்தெடுத்து குறிப்பிட்ட நபர்களுக்கு ஜகாத்து நிய்யத்து வைத்து கொடுத்து விடவேண்டும்.

**எல்லாம் வல்ல இறைவன், ஜகாத்துக் கொடுக்கப்பட வேண்டிய நபர்களைக் கீழ்கண்ட திருவசனத்தில் கூறுகிறான்.**

إِنَّمَا الصَّدَقَٰتُ لِلْفُقَرَآءِ وَالْمَسَٰكِينِ
وَالْعَٰمِلِينَ عَلَيْهَا وَالْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ
وَفِى الرِّقَابِ وَالْغَٰرِمِينَ وَفِى سَبِيلِ اللَّهِ
وَابْنِ السَّبِيلِ ۖ فَرِيضَةً مِّنَ اللَّهِ ۗ وَاللَّهُ
عَلِيمٌ حَكِيمٌ ۝ ٩:٦٠

***தமிழாக்கம்:-***

(ஜகாத்து என்னும்) தானங்களெல்லாம் (1) தரித்திரர்களுக்கும் (2) ஏழைகளுக்கும் (3) தானத்தை வசூலித்து வினியோகிப்பதற்காக இஸ்லாமிய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட சிப்பந்திகளுக்கும் (4) புதிதாக இஸ்லாத்தைத் தழுவியோர்களுக்கும் (5) அடிமைகளை விடுதலை செய்வதற்கும் (6) கடனில் மூழ்கிக் கிடப்பவர்களுக்கும் (7) அல்லாஹ்வுடைய

பாதையில் போர் புரிபவர்களுக்கும் (8) வழிப் போக்கர் களுக்கும் உரித்தானதாக அல்லாஹ் ஏற்படுத்திய கடமையாகும். அல்லாஹ் யாவையும் மிக்க அறிந்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கிறான்.
(9–60)

(1) اَلْفُقَرَاءُ :- புகராஉ என்பவர்கள் ஏழைகள். அவர்களிடம் அவர்களின் அத்தியாவசியத் தேவைக்குமேலேயே அவர்களிடம் பொருளாதாரம் இருக்கும். ஆனாலும் அவர்களிடம் ஜகாத்துக் கொடுக்கக்கூடிய அளவை அவர்களின் பொருளாதாரம் எட்டாது.

(2) اَلْمَسَاكِيْنُ :- இவர்கள் பரம ஏழைகள் அன்றாடத் தேவைக்குப் பிச்சை எடுத்துத்தான் அவர்களின் ஜீவனம் நடந்தாக வேண்டிய நிலையிலுள்ளவர்கள்.

(3) اَلْعَامِلِيْنَ عَلَيْهَا :- இவர்கள் இஸ்லாமிய அரசாங்கத்தால் ஜனங்களிடமிருந்து ஜகாத்துத் தொகையை வசூல் செய்து வர அரசாங்கத்தின் உத்திரவுப்படி ஜகாத்துத் தொகையை வினியோகிப் பதற்காக நியமிக்கப்பட்ட சிப்பந்திகள்.

(4) اَلْمُؤَلَّفَةِ قُلُوْبُهُمْ :- புதிதாக இஸ்லாத்தை ஒப்புக் கொண்டு, இஸ்லாத்திற்கு வந்தவர்கள். ஆரம்ப காலத்தில் இவர்கள் எல்லோருக்குமே ஜகாத்துக் கொடுக்கப்பட்டது கலீபா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் அவர்களில் உள்ள ஏழைகளுக்கு மட்டிலும் கொடுத்தால் போதும் என முடிவு செய்து மற்றவர் களுக்குக் கொடுப்பதை நிறுத்திவைத்தார்கள் (ஹனபி மதுஹப்)

*(5)* اَلرِّقَابِ :- அடிமைகளை விடுவிப்பதற்காக வும் ஜகாத்தைக் கொடுக்கலாம்.

*(6)* وَالْغٰرِمِيْنَ :- கடனில் மூழ்கி அதை அடைக்க எவ்வித ஆதரவும் இல்லாதவர்களுக்கும் ஜகாத்தைக் கொடுக்கலாம்.

*(7)* فِيْ سَبِيْلِ اللّٰهِ :-` அல்லாஹ்வுடைய பாதையில் போர் புரிவோருக்கும் ஜகாத்தைக் கொடுக்கலாம்.

*(8)* وَابْنِ السَّبِيْلِ :- வழிப் போக்கர்கள் அவர்கள் சொந்த ஊரில் போதிய வசதி படைத்தவர்களாக இருந்த போதிலும் சரிதான் மேற் சொன்ன (எட்டுக்குறிப்பீட்டி லுள்ள) நபர்களிலும் الْعٰمِلِيْنَ அல் ஆமிலீனைத் தவிர மற்றவர்கள் ஜகாத்துக் கொடுப்பதற்குள்ள அளவை (نِصَاب) எட்டியவர்களாக இருக்கக் கூடாது.

## ஜகாத்துக் கொடுக்கக் கூடாதவர்கள். அவர்கள் ஜகாத்து வாங்கக் கூடாது.

1. பனூ ஹாஸிம் (هَاشِمْ) கள். அதாவது (هَاشِمْ) ஹாஷிம் அவர்களின் சந்ததிகள். அதாவது ஹஸன் ஹுஸைன் (ரலி) அவர்களின் குடும்ப அங்கத்தினர் களும் ரஸூல் (ஸல்) அவர்களின் குடும்ப அங்கத்தினர்களுமாவர்.

2. பெற்றோர்கள், பாட்டனார், பிள்ளைகள் பேரன், பேத்திமார்கள், புருஷன், மனைவி முதலியோர்.

3. முஸ்லிமல்லாதார்.

4. மதரஸா, பள்ளிவாசல், பள்ளிக் கூடங்கள் கட்டுவதற்கு ஜகாத்துப் பணத்தைக் கொடுக்கக் கூடாது.

## ஜகாத்துக் கொடுத்து வருபவர்களுக்குக் கீழ்கண்ட நன்மைகள் கிடைப்பதாக நமது நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்

*1. அல்லாஹ்வின் திருப்தியும், திருப் பொருத்தமும் ஜகாத்துக் கொடுப்பவர்களின் பேரில் உண்டாகிறது.*

*2. செல்வப் பெருக்கம் ஏற்படுகிறது.*

*3. அல்லாஹ்வின் மன்னிப்பும் ஆசீர்வாதமும் ஏற்படுகிறது.*

*4. அழிவுகளினின்றும் பாதுகாப்புக் கிடைக்கிறது.*

*5. ஆபத்துகளினின்றும் பாதுகாப்புக் கிடைக்கிறது.*

*6. அல்லாஹ்வின் கோபத்திலும், கெட்ட இறப்பிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கிறது.*

*7. தீர்ப்பு நாளில் ஜகாத்து நிழல் தரும் ஒரு ஒதுங்குமிடமாக இருக்கும்.*

*8. நிகழவிருக்கும் 70 துர்க்காரியங்களுக்குப் பாதுகாப்பாக இருக்கும்.*

*9. நரக நெருப்புக்கு ஓர் கேடயமாக அமையும்*

*10. சகல நற்காரியங்களிலும் விருத்தியளிக்கிறது.*

*11. பயம், துக்கம் முதலியவைகளிலிருந்து காப்பாற்றுகிறது.*

## ஜகாத்தும் தர்மமும் கொடுக்காதவர் களைப்பற்றி அல்லாஹுத் தஆலா தனது திருமறையில் கூறியிருப்பதைச் சற்று நோட்ட மிடுவீர்களாக!

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِنَّ كَثِيرًا مِّنَ ٱلْأَحْبَارِ
وَٱلرُّهْبَانِ لَيَأْكُلُونَ أَمْوَٰلَ ٱلنَّاسِ بِٱلْبَٰطِلِ
وَيَصُدُّونَ عَن سَبِيلِ ٱللَّهِ ۗ وَٱلَّذِينَ يَكْنِزُونَ
ٱلذَّهَبَ وَٱلْفِضَّةَ وَلَا يُنفِقُونَهَا فِى سَبِيلِ ٱللَّهِ
فَبَشِّرْهُم بِعَذَابٍ أَلِيمٍ ۝ يَوْمَ يُحْمَىٰ عَلَيْهَا
فِى نَارِ جَهَنَّمَ فَتُكْوَىٰ بِهَا جِبَاهُهُمْ وَ
جُنُوبُهُمْ وَظُهُورُهُمْ ۖ هَٰذَا مَا كَنَزْتُمْ
لِأَنفُسِكُمْ فَذُوقُوا۟ مَا كُنتُمْ تَكْنِزُونَ ۝

٩: ٣٤،٣٥

***தமிழாக்கம்:-***

விசுவாசிகளே நிச்சயமாக (அவர்களுடைய) பாதிரிகளிலும், சந்நியாசிகளிலும் அநேகர் மக்களின் பொருள்களைத் தவறான முறையில் விழுங்கி விடுவதுடன் மக்கள் அல்லாஹ்றவின் பாதையில் செல்வதையும் தடை செய்கின்றனர். ஆகவே (இவர்களுக்கும்) (எவர்) பொன்னையும் வெள்ளி யையும் சேகரித்து வைத்துக் கொண்டு அதனை அல்லாஹ்றவுடையப் பாதையில் செலவு செய்யா

திருக்கின்றார்களோ அவர்களுக்கும் (நபியே) நீர் துன்புறுத்தும் வேதனையை நன் மாராயம் கூறுவீராக! பொன், வெள்ளிகளை நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி, அவற்றைக் கொண்டு அவர்களுடைய நெற்றிகளிலும், விலாக்களிலும், முதுகுகளிலும் சூடிட்டு, உங்களுக்காக நீங்கள் (ஜகாத்துக் கொடுக்காமல்) சேகரித்து வைத்திருந்த இவற்றை (சிறிது) சுகித்துப் பாருங்கள் என்று கூறப்படும் நாளை (நபியே) நீர் அவர்களுக்கு ஞாபக மூட்டுவீராக!

## ஜகாத்துக் கொடுக்காதவர்களுக்குக் கீழ்கண்ட வேதனைகள் உண்டு என்று நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்

*1. யார் ஜகாத்துக் கொடுக்கவில்லையோ அவர்களின் வாழ்க்கையில் அல்லாஹ் வறட்சியை உண்டாக்கிவிடுவான்.*

*2. ஜகாத்துக் கொடுக்கும் அளவுக்குச் செல்வம் கொடுக்கப்பட்டவன் ஜகாத்துக் கொடுக்கவில்லை யானால், அவனுக்குக் கொடுக்கப்பட்ட பொருளை, கியாமத்து நாளையில் விஷப்பாம்பாக மாற்றி அவனுடைய கழுத்தில் சுற்றி விடப்படும். அப்பாம் பானது அவனுடைய இரு தாடைகளையும் கடித்துக் கொண்டு நான்தான் ஜகாத்துக் கொடுக்காமல் நீ சேகரித்து வைத்திருந்த பொருளாகும் என்று சொல்லிக் கொண்டிருக்கும்.*

*(அல்புஹாரீ)*

*3. ஒரு சமயம் ரஸூல் (ஸல்) அவர்கள், இரு பெண்கள் தங்கவளையல்கள் அணிந்திருப்பதைக்*

தண்ணுற்று, இந்தத் தங்க வளையல்களுக்கு ஜகாத்துக் கொடுத்துவிட்டீர்களா? என்று வினவ, அவர்கள் இல்லையென்று சொன்னதும், இவைகளை கியாமத்து நாளையில் நெருப்பில் காய்ச்சி அவைகளை உடையாக அணிவிப்பதை நீங்கள் விரும்புவீர்களா? என்று கேட்டார்கள்.

(திர்மிதி)

## ஜகாத்துக்கு நிய்யத்து

1. ஜகாத்துக் கொடுக்கும் போதோ, கொடுப்பதற்கு முன்போ, இந்தத் தொகையை எனது ஜகாத்தாகக் கொடுக்கிறேன் என மனதில் நிய்யத்து வைத்துக் கொள்ள வேண்டும். அப்படி நிய்யத்து வைக்கவில்லையானால் அது ஜகாத்தாகாது. பொது தர்மமாகிவிடும். ஜகாத்துக் கொடுப்பவர்கள் நிய்யத்து வைத்துக் கொண்டால் போதும். அதைப் பெறுபவர்களுக்கு ஜகாத்து என்று தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் பொது மதரஸா, பள்ளிகள், சங்கங்கள், பைத்துல்மால் முதலிய இடங்களிலிருந்து வசூல் செய்பவர்களிடம் இது என்னுடைய ஜகாத்துக்குள்ள நிதியாகும் என்று சொல்லி விட்டால், அவர்கள் சேர்க்க வேண்டியவர்களிடம் சேர்த்து விடுவார்கள்.

2. ஒரு நபர் ஜகாத்துக்கென்று நினைத்து ஒரு தொகையை எடுத்து வைத்துக் கொண்டு அதை உரியவர்களுக்குக் கொடுக்கும்போது ஜகாத்து நிய்யத்து வைக்க மறந்து விட்டால் அது சமயம் அந்த ஜகாத்துக் கூடிவிடும். காரணம் தொகையை எடுத்து வைக்கும் போதே ஜகாத்துக் கென்று நிய்யத் வைத்து விட்ட படியால் கூடுமாகும்.

3. ஒரு நபர் ஜகாத்து வாங்கத் தகுதியுள்ளவருக்கு ஒரு தொகையை சன்மானமாகக் கொடுத்து விட்டு அதை ஜகாத்து என்று நிய்யத்து வைத்துக் கொள்வாரானால் அதுவும் ஜகாத்தாக நிறைவேறிவிடும்.

4. ஒரு நபர் ஜகாத்துப் பெறுவதற்குத் தகுதியுள்ள ஒரு ஏழைக்கோ, அல்லது அவருடைய சொந்தக்காரர்களுக்கோ, வெகுமதியாகவோ அல்லது பெருநாள் பரிசாகவோ கொடுத்துவிட்டு அதை ஜகாத்து என்று நிய்யத்து வைத்துக் கொண்டாலும் அது ஜகாத்தாக நிறைவேறிவிடும். வாங்கக் கூடியவர் அதைப்பரிசு என்றோ அல்லது வெகுமதி என்றோ நினைத்துக் கொண்டாலும் சரியே.

5. ஒரு நபர் வருட முடிவில் இவ்வளவு தொகை நாம் ஜகாத்துக் கொடுக்க வேண்டும் என்று தனியாக எடுத்து வைத்திருக்கும்போது எதிர் பாராத முறையில் கொள்ளையர்களால் கொள்ளை அடிக்கப்பட்டாலோ, அல்லது ஏதாவது ஒரு விபத்தில் அழிந்துவிட்டாலோ அதைத் திரும்பத் தன் செல்வத்திலிருந்து எடுத்து ஜகாத்துக் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால் அந்தத் தொகையை வேண்டுமென்றே அழித்து விடுவாரானால் அதைக் கட்டாயம் தன் சொத்தி லிருந்து எடுத்து ஜகாத்துக் கொடுத்தாக வேண்டும்.

رَجُلٌ وَجَبَتْ عَلَيْهِ زَكٰوةُ الْمِئَتَيْنِ
فَافْرَزَ خَمْسَةً مِنْ مَالِهِ ثُمَّ ضَاعَتْ
مِنْهُ تِلْكَ الْخَمْسَةُ لَاتَسْقُطُ عَنْهُ الزَّكٰوةُ

(البحر العاطلين)

*தமிழாக்கம்:-*

*6.* ஒரு மனிதனுக்கு ஜகாத்து வாஜிபானது (உதாரணம்) இருநூறு (200) திர்ஹங்களில் 2½ விழுக்காடு வீதம் ஐந்து (5) திர்ஹம் தனித்து எடுத்து வைத்தான். பின்பு அப்பொருள் (5திர்ஹம்) அழிந்து விட்டது. அவனின் மீதுள்ள ஜகாத்து நீங்கிவிட வில்லை. திரும்பக் கொடுத்தாக வேண்டும் (ஹனபி மத்கப்) ஷாபி மத்கப்படி மஹராகக் கொடுத்த நகைகளுக்கு ஜகாத்துக் கிடையாது.

*7.* ஒருவருடம் பூர்த்தியாகி ஜகாத்துத் தொகையைப் பிரித்து வைத்துக் கொண்டு அதைக் கொடுத்து முடிப்பதில் தாமதம் கூடாது. காரணம் யாருக்கு இறப்பு எந்த நேர மென்பது கிடையாது. எந்த நேரத்திலும் ஏற்படக்கூடும். அப்படி இறந்து விட்டால் நாம் ஜகாத்துக் கொடுக்காமல் இறந்துவிட நேரிடும். இதைத்தான் அல்லாஹுத் தஆலா கீழ்கண்ட திருமறை வசனத்தில் சுட்டிக் காட்டுகிறான்:

وَسَارِعُوْٓا اِلٰى مَغْفِرَةٍ مِّنْ رَّبِّكُمْ وَجَنَّةٍ
عَرْضُهَا السَّمٰوٰتُ وَالْاَرْضُ ۙ اُعِدَّتْ لِلْمُتَّقِيْنَ ۙ

٣ : ١٣٣

*தமிழாக்கம்:-*

உங்கள் இறைவனின் மன்னிப்புக்கும் வானங்கள் பூமியின் அகலத்திற்கு ஒப்பான சுவன பதிக்கும் விரைந்து கொள்ளுங்கள். அது பயபக்தி உடையவர் களுக்காகவே சித்தப்படுத்தப்பட்டுள்ளது. (3:133) ஒரு சமயம் நமது நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகை

நேரம் நெருங்கித் தொழுகை ஆரம்பிக்கும் சமயத்தில் கொஞ்சம் பொறுங்கள் என்று சொல்லிவிட்டு தங்கள் வீடு சென்று திரும்பி வந்து தொழுகையை ஆரம்பித்தார்கள். தொழுகை முடிந்த பின் நபித் தோழர்கள் 'தொழுகை ஆரம்பிக்கும் சமயத்தில் கொஞ்சம் பொறுங்கள் என்று சொல்லி விட்டு தாங்கள் வீடு சென்று வந்து தொழுகையை ஆரம்பித்தீர்களே! அதன் விபரம் எங்களுக்குத் தெரிவிக்கலாமா?" என்று வினவ, அதற்கு நாயகம் (ஸல்) அவர்கள் 'யுத்தத்தில் என் ஈவுக்குக் கிடைத்த ஓர் தங்கக் கட்டியை என் வீட்டில் வைத்து விட்டு வந்தேன். அதை தர்மமாக ஏழைகளுக்குக் கொடுக்கச் சொல்லி வர மறந்து விட்டேன். அதைத்தான் நான் போய் ஏழைகளுக்குத் தருமமாகக் கொடுத்து விடும்படி சொல்லிவிட்டு வந்தேன்" என்றார்கள். அதற்குத் தோழர்கள் அதைத் தொழுகை முடிந்துக் கொடுக்கலாம்தானே!" என்று சொல்ல, அதற்கு நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகை முடியும் வரை நான் ஜீவித்திருப்பேன் என்பதற்கு என்ன உறுதியிருக்கிற தென்று பதில் சொல்லியதோடல்லாது நல்ல காரியங்களையும், நம் கடமைகளையும் சிறிதும் கால தாமதப்படுத்தாது, அவ்வப்போது செய்து முடித்துக் கொள்ளுங்கள் என்று அறிவுரை கூறினார்கள். இது போலவே ஒரு சமயம் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களிடம் தானம் கேட்டு வந்த ஒரு ஏழைக்குத் தம் இடக்கரத்தின் பக்கத்திலிருந்து நாணயத்தை எடுத்து தமது இடக்கரத்தால் கொடுக்க, பக்கத்திலிருந்த மாணவர் ஒருவர் 'இடக்கரத்தால் தானம் கொடுத்தீர்களே! எங்களையெல்லாம் தானம்

எது கொடுத்தாலும் வலக்கரத்தால் கொடுக்கச் சொல்வீர்களே! ஆகவே தாங்கள் இடக்கரத்தால் கொடுத்ததின் நோக்கத்தை நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று வினவ, அதற்கு இமாம் அவர்கள் எனது இடக்கரத்தின் சமீபத்தில் அந்த நாணயம் இருந்தது. ஆகவே வலக்கரத்தால் அந்த நாணயத்தை எடுக்கத்தாமதமாகி, அதற்கிடையில் நான் இறக்க நேர்ந்தால், நான்நாடி இருந்த நற்காரியம் நடை பெறாது நான் இறந்து விடக்கூடுமோ என்ற பயத்தால் தான் இடது கரத்தால் கொடுத்தேன் என்று சொன்னதோடல்லாது, நற்காரியங்களையும், நமது கடமைகளையும் சிறிதும் தாமதப்படுத்தாது அவ்வப்போது செய்து முடித்து விடுங்கள் என்று அறிவுரை கூறினார்கள்.

ஆகவே அன்புள்ள சகோதர, சகோதரிகளே! நாயகம் (ஸல்) அவர்களின் அடிச்சுவட்டையும், நமது இமாம்கள் கூறிய அறிவுரைகளையும் கடைப்பிடித்து, நமது கடமைகளாகிய தொழுகை, ஜகாத்து, நோன்பு, ஹஜ், மற்றுமுள்ள தர்மங்கள் போன்ற நல் அமல்களைக் கால தாமதமின்றி அவ்வப் போது நிறைவேற்றி அல்லாஹ்வின் அருளைப் பெறு வோமாக! ஆமீன்.

**ஜகாத்து (الزَّكوة) க்கும், பொது தருமத்திற்கும் (الصدقة) உள்ள வித்தியாசம்:**

ஜகாத்தானது குறிப்பிட்ட நபரிடம் ஒரு குறிப்பிட்ட எல்லையின் அளவை (نِصَاب) எட்டிய பொருள், ஒரு குறிப்பிட்ட (1 வருட) கால அளவுக்கு ஒரு நபரிடம் இருந்திருந்தால் அதில் குறிப்பிட்ட 2½

(இரண்டரை) விழுக்காடுக்குக் குறையாமல் எடுத்து சொல்லப்பட்ட குறிப்பிட்ட நபருக்கு மட்டிலும் கொடுக்கவேண்டும். 2½ விழுக்காடுக்கு மேல் கொடுப்பதால் குற்றமில்லை. ஆனால் இரண்டரை விழுக்காடுக்கு குறைவாகக் கொடுத்தால் ஜகாத்து நிறைவேறாது. அடுத்தபடியாக, ஜகாத்தைத் தமது தாய், தந்தை, தந்தையின் தந்தை, தாயின் தந்தை, தமது பிள்ளைகள் முதலியவர்களுக்குக் கொடுப்பது கூடாது. மற்றபடி, சகோதரர், சகோதரிகள், மற்றும் சுற்றத்தார்களுக்கு ஜகாத்தைப் பெற தகுதியுடையவர் களானால் அவர்களுக்குக் கொடுக்கலாம். நமது ஜகாத்தும் நிறைவேறிவிடும். மேலும் தங்கம், வெள்ளி தவிர, மற்ற வேறு எந்த உலோகப் பொருள்களுக்கும் ஜகாத்துக் கிடையாது. நம் வியாபாரத்தலங்களிலும், வீடுகளிலும் உள்ள பிட்டிங்ஸ், பர்னிச்சர், உபயோகிக்கும் வாகனங்கள் எதற்கும் எத்தனை இருந்தாலும் அவைகளுக்கும் ஜகாத்துக் கிடையாது.

நம் சொந்த உபயோகத்திற்குள்ள வைரம், முத்து, அசல் அல்லது இமிடேஷன் கற்கள் இவைகளுக்கும், இவைகளால் செய்யப்பட்ட நகைகளுக்கும் ஜகாத்துக் கடமையில்லை. ஆனால் தங்கம், வெள்ளி இவைகளுக்கும் அவைகளால் செய்யப்பட்டு சொந்த உபயோகத்திற்குள்ள நகைகளுக்கும் கூட ஜகாத்து உண்டு. ஆனால் நகைகளில் தங்கம் அல்லது வெள்ளியை விட மற்ற உலோகங்கள் மிகைத்திருந்தால் அதாவது (51%) ஐம்பத்தொன்று விழுக்காடு இருக்கும் பட்சத்தில் அந்த நகைகளுக்கு ஜகாத்துக் கிடையாது. மேலும் ஷாபி மத்ஹப் பிரகாரம் பெண்கள்

உபயோகிக்கும் நகைகளுக்கு பொதுவாக ஜகாத்துக் கிடையாது. ஆனால் ஹனபி மத்ஹபில் அவைகளுக்கும் ஜகாத்துக் கொடுக்க வேண்டும்.

வீடுகளில் உபயோகிக்கும் (Furniture), மேசை, நாற்காலி, சோபா போன்ற தளவாடங்களுக்கும், துணி மணிகள், பாத்திரம் வகைகளுக்கும் ஜகாத்துக் கிடையாது. ஆனால் இஸ்லாம் அதிக ஆடம்பரத்தை விரும்பவில்லை என்பதை மறந்து விடக்கூடாது.

தங்கம், வெள்ளி தவிர மற்ற உலோகங்களுக்கோ உலோகத்தால் செய்த நகை, மற்ற பொருள்களுக்கோ ஜகாத்து இல்லாதிருப்பினும் அவைகளில் வியாபாரம் செய்பவர்கள் அவைகளை வியாபாரப் பொருளாகக் கணக்கெடுத்து ஒவ்வொரு வருஷமும், அதன் பேரிலும் ஜகாத்து கொடுப்பது கடமையாகும். ஒரு பெண்ணுக்குத் தங்கம் வெள்ளியில் மஹர் கொடுத்தால் அப்படிக் கொடுக்கப்பட்ட தங்கம், வெள்ளியின் மதிப்புத் தொகை (نِصَاب) அளவை எட்டினால் அதற்கும் ஒவ்வொரு வருஷமும் ஜகாத்துக் கொடுக்க வேண்டும் (ஹனபி) மேலும் சேமிப்புப் பத்திரங்கள், முதலீட்டுப்பத்திரங்கள் பேரில் போட்டிருக்கும் தொகை (نِصَاب) அளவை எட்டியிருந்தால் அவைகளுக்கும் வருடா வருடம் ஜகாத்து உண்டு.

ஒரு மனிதனிடம் ரூ 10000 (பத்தாயிரம்) இருந்து ரூ 9000 (ஒன்பதாயிரம்) கடன் இருந்தாலும் கூட மேற்படி கடன் போக பாக்கி ரூ 1000 (ஒரு ஆயிரம்)க்கு (نِصَاب) அளவை எட்டியிருந்தால் அதற்கும் ஜகாத்துக் கொடுத்தாக வேண்டும்.

# ( الصدقة )

ஸதகா என்பது பணத்தையோ, பொருளையோ மற்றவர்களுக்கு எதுவும் பதிலாக வாங்காமலும், எதிர்பார்க்காமலும், இலவசமாகக் கொடுப்பது ஸதக்காவாகும். ஸதக்காவை அல்லாஹுத் தஆலா ஜகாத்தைப் போல் நம்மீது கட்டாயக் கடமையாக விதிக்கவில்லை.

மேலும் அப்படி ஸதக்காவாகக் கொடுக்கப்படும் தொகை ஜகாத்தைப் போல் (نصاب) அளவை எட்ட வேண்டும் என்பதும், ஒருவருட காலம் கையில் இருந்திருக்க வேண்டுமென்பதும் கிடையாது ஜகாத்தைப் போல் குறிப்பிட்ட நபர்களுக்கு மட்டிலும்தான் கொடுக்கப்பட வேண்டுமென்ற கட்டுப்பாடும் கிடையாது. யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கலாம்.

பள்ளிவாசல், மதரஸா பள்ளிக் கூடம் முதலியவைகளுக்கும் கொடுக்கலாம். ஜகாத்தைப் போல் 2½ (இரண்டரை) விழுக்காட்டை எட்டியிருக்க வேண்டுமென்ற அளவு நிர்ணயமும் கிடையாது. 2½ விழுக்காட்டிற்குக் குறைவாகவோ அதற்கு அதிகமாகவோ கொடுக்கலாம். ஸதகாவில் ஜகாத்து அல்லாத மற்ற தர்மங்களும் சேரலாம். ஆனால் ஜகாத்தில் மற்ற தர்மங்கள் சேர்த்துக் கணக்கிடப்பட மாட்டாது. ஒரு மனிதன் கொடுக்கக் கூடிய ஸதகாவிற்கு அல்லாஹுத் தஆலா கீழ்கண்ட குர்ஆன் ஆயத்தில் ஓர் சோளக்கதிரை உதாரணம் காட்டுகிறான்.

مَثَلُ الَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ فِىْ سَبِيْلِ اللّٰهِ
كَمَثَلِ حَبَّةٍ اَنْبَتَتْ سَبْعَ سَنَابِلَ فِىْ كُلِّ
سُنْۢبُلَةٍ مِّائَةُ حَبَّةٍ ۗ وَاللّٰهُ يُضٰعِفُ لِمَنْ
يَّشَآءُ ۗ وَاللّٰهُ وَاسِعٌ عَلِيْمٌ ۝ ٢:٢٦١

***தமிழாக்கம்:-***

*நபியே! அல்லாஹ்வுடைய பாதையில் தங்களுடைய பொருளைச் செலவு செய்கின்றவர்களுடைய (பொருளுக்கு) உதாரணம் ஒருவித்தின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. அந்த வித்து ஏழுகதிர்களைத் தருகிறது ஒவ்வொரு வித்திலும் நூறு (100) வித்துகள் வீதம் எழு நூறு (700) வித்துக்கள் அந்த வித்திலிருந்து உற்பத்தியாகின்றன. அல்லாஹ் தான் விரும்பியவர்களுக்கு இன்னும் இரட்டிப்பாக்கிக் கொடுக்கின்றான். அதாவது (700X2)= 1400 ஆயிரத்து நானூறு வித்துக்களைக் கொடுக்கின்றான். ஏனெனில் அல்லாஹ் கொடையில் விசாலமானவனும் யாவற்றையும் அறிந்தவனுமாவான்.*

***(2–261)***

## சதக்காக் கொடுப்பது

*நம்மிடமுள்ள நல்ல வஸ்துக்களை தானமாகக் கொடுத்துக் கொள்ளுங்கள் என்பதாக அல்லாஹ் கிழ்கண்ட குர்ஆன் ஆயத்தில் கூறுகிறான்.*

لَنْ تَنَالُوا الْبِرَّ حَتّٰى تُنْفِقُوْا مِمَّا تُحِبُّوْنَ ۗ
وَمَا تُنْفِقُوْا مِنْ شَىْءٍ فَاِنَّ اللّٰهَ بِهٖ عَلِيْمٌ ۝ ٣: ٩٢

*தமிழாக்கம்:-*

தானம் செய்தால் உங்களுக்குப் பிரியமான பொருளிலிருந்து நீங்கள் செலவு செய்யாத வரையில் நீங்கள் நன்மையடைய மாட்டீர்கள்.

*(3-92)*

قَوْلٌ مَّعْرُوْفٌ وَّمَغْفِرَةٌ خَيْرٌ مِّنْ صَدَقَةٍ يَّتْبَعُهَآ اَذًى ۗ وَاللّٰهُ غَنِىٌّ حَلِيْمٌ ۝ (٢. ٢٦٣)

*(தர்மம் செய்து அதை வாங்கியவனுக்கு)* துன்பம் தொடரும்படி செய்யும் தருமத்தைவிட இன் சொல்லும் மன்னிப்பும் மிக மேலானது. அன்றி அல்லாஹ் *(தன் படைப்புகளை விட்டும்)* தேவை யற்றவனும் மிக சகிப்புத் தன்மையுள்ளவனுமாவான்.

*(2:263)*

يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تُبْطِلُوْا صَدَقٰتِكُمْ
بِالْمَنِّ وَالْاَذٰى ۙ كَالَّذِىْ يُنْفِقُ مَالَهٗ رِئَآءَ النَّاسِ
وَلَا يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ ۗ فَمَثَلُهٗ كَمَثَلِ
صَفْوَانٍ عَلَيْهِ تُرَابٌ فَاَصَابَهٗ وَابِلٌ فَتَرَكَهٗ
صَلْدًا ۗ لَا يَقْدِرُوْنَ عَلٰى شَىْءٍ مِّمَّا كَسَبُوْا ۗ
وَاللّٰهُ لَا يَهْدِى الْقَوْمَ الْكٰفِرِيْنَ ۝ (٢: ٢٦٤)

*தமிழாக்கம்:-*

விசுவாசம் கொண்டோரே! அல்லாஹ்வையும் இறுதி நாளையும் விசுவாசம் கொள்ளாமலும்

(முகஸ்துதிக்காக பிற) மனிதர்களுக்குக் காட்டுவதற்காகவும் தன் பொருளைச் செலவு செய்கிறவனைப் போல் நீங்களும் உங்களுடைய தருமங்களை பிறரிடம் சொல்லிக் காண்பித்தும், நோவினைச் செய்தும் (அதன் பலனை) வீணாக்கி விடாதீர்கள். ஆகவே அவனுடைய உதாரணம், ஒரு வழுக்கைப் பாறையைப் போன்றிருக்கிறது. அதன்மீது மண் படிந்து, அப்போது ஒரு பெரும் மழை (பெய்து) அதைத் தொட்டது. அப்போது அது வெறும் பாறையாகி விட்டது. ஆகவே அவர்கள் சம்பாதித்ததிலிருந்து எந்த ஒன்றின் மீதும் (அதன் பலனைப் பெற) சக்தி பெற மாட்டார்கள். மேலும் அல்லாஹ் நிராகரிக்கும் சமூகத்தாரை நேரான வழியில் செலுத்த மாட்டான் (மேலும் மனிதர்களில் சிலர் தாம் பாடுபட்டுச் சம்பாதித்த பொருளை எப்படிப் பிறருக்கு அவர்களிடமிருந்து எவ்விதப் பிரதி பலனையும் பெறாது ஜகாத்தாகக் கொடுப்பதென்றும், எவ்வளவு தொழச் சொன்னாலும் சரி அல்லது நோன்பு நோற்கச் சொன்னாலும் சரி அவைகளைச் செய்கிறோம். அதே நேரத்தில் தேடிய பொருளை மட்டிலும் பிறருக்குக் கொடுக்கச் சொல்லாதீர்கள் என்று சொல்லக் கூடியவர்களுக்குக் கீழ் கண்ட ஹதீஸை நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.

لَا اِيْمَانَ لِمَنْ لَا صَلٰوةَ لَهُ

لَا صَلٰوةَ لِمَنْ لَا زَكٰوةَ لَهُ

***தமிழாக்கம்:-***

தொழுகை இல்லாதவருக்கு ஈமானில்லை ஜகாத்து கடமைப்பட்டவர்கள் ஜகாத்துக் கொடுக்காதவருக்கு தொழுகை இல்லை. மேலும் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்

اَلسَّخِيُّ حَبِيْبُ اللهِ وَلَوْكَانَ فَاسِقًا
اَلْبَخِيْلُ عَدُوُّاللهِ وَلَوْكَانَ عَابِدًا ٥

*தமிழாக்கம்:-*

தர்மம் செய்கிறவன் இறைவனின் தோழனாவான், அவன் பாவியாக இருப்பினும் சரியே. கஞ்சன் (உழுத்தன்) இறைவனின் விரோதியாவான், அவன் வணக்க சாலியாக இருப்பினும் சரியே.

## கால்நடை மிருகங்களின் ஜகாத்து

ஆடு, மாடு, ஒட்டகம் இவைகள் வைத்திருந்தால் அவைகளுக்கும் ஜகாத்துக் கொடுப்பது கடமையாகும். ஆடுகளில் வெள்ளாடு, செம்மறி ஆடு, பள்ளாடு இவைகள் யாவும் ஒரே இனமாகக் கருதப்படும். மாடுகளில் காளை மாடு, பசுமாடு, எருமை மாடு இவைகள் எல்லாமே ஒரே இனமாகத்தான் கணக்கெடுத்துக் கொள்ளப்படும்.

மேற்படி மிருகங்கள், காடுகளுக்குச் சென்று உரிமையாளருக்கு யாதொரு செலவில்லாமல் மேயக் கூடியவைகளாகவும், அவ்வாறு ஒருவருடத்திற்கு மேல் அவருடைய பராமரிப்பில் இருந்திருக்கக் கூடியவைகளாவும் இருந்து, அவைகள் (نِصَاب) ஜகாத்தின் அளவை எட்டி இருப்பின், அவைகளுக்கும் ஜகாத்துக் கொடுப்பது கடமையாகும். ஒவ்வொரு மிருகங்களுக்கும் தனித்தனி கணக்குகள் உள்ளன. அதன் அட்டவணை கீழே தரப்பட்டுள்ளது. மேற் சொன்ன மிருகங்களில் சொந்த வேலைக்காக ஒதுக்கப்பட்டவைகளுக்கு ஜகாத்து கடமையில்லை.

## ஆடுகளில் ஜகாத்து

ஆடுகளில் 39 (முப்பத்தொன்பது) வரை இருப்பின் அவைகளுக்கு ஜகாத்து விதியாகாது. ஆனால் 40 (நாற்பதும்)ம் அதற்கு மேற்பட்டவைகளுக்கும் அட்டவணையில் கண்ட கணக்குப்படி ஜகாத்துக் கொடுக்க வேண்டும்"

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 40 | முதல் | 120 | வரை | 1 ஆடு | ஜகாத்து |
| 121 | முதல் | 200 | வரை | 2 ஆடுகள் | " |
| 201 | முதல் | 399 | வரை | 3 ஆடுகள் | " |

400 ஆடுகள் இருந்தால் 4 ஆடுகளும் பின்னர் ஒவ்வொரு நூறு (100) ஆடுகளுக்கும் ஒரு ஆடு வீதம் கூட்டிக் கொள்ளவும்.

## மாடுகளில் ஜகாத்து

மாடுகளில் 29 (இருபத் தொன்பது) வரை இருப்பின் அவைகளுக்கு ஜகாத்து விதியாகாது. 30 மாடுகள் இருப்பின் ஜகாத்து அளவை (نِصَاب) எட்டி அவை ஒருவருடத்திற்குமேல் தம்மிடம் இருக்கு மானால், கீழ்கண்ட அட்டவணைப்படி ஜகாத்துக் கொடுத்தாக வேண்டும்.

| | | |
|---|---|---|
| 30 முதல் | 39 வரை | 1வயது நிரம்பிய கன்று 1 |
| 40 முதல் | 59 வரை | 2வது வயதில் புகுந்தகன்று 1 |
| 60 முதல் | 69 வரை | 1வயது கன்று 2 |

அடுத்து ஒவ்வொரு 30 (முப்பது) மாடுகளுக்கு ஒரு வயது கன்று குட்டி ஒன்றும், ஒவ்வொரு 40 (நாற்பது) மாடுகளுக்கும் 2(இரண்டு) வயது கன்று 1ம் (ஒன்று) சேர்த்துக் கணக்கிட்டுக் கொடுத்துக் கொள்ளவும்.

குறிப்பு:- இரண்டு வயது கன்றுகுட்டி பெண் குட்டியாக இருப்பது சிறந்தது.

## ஒட்டகைகளில் ஜகாத்து

ஒட்டகைகளில் 4 (நான்கு) வரை இருப்பின் அவைகளுக்கு ஜகாத்துக் கிடையாது. 5 ஒட்டகையோ அதற்கு அதிகமாகவோ இருக்குமானால் அவைகளுக்கு ஜகாத்து விதியாகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5 முதல் | 9 | ஒட்டகை | வரை இருப்பின் | 1 | ஆடு |
| 10 முதல் | 14 | ஒட்டகை | வரை இருப்பின் | 2 | ஆடுகள் |
| 15 முதல் | 19 | ,, | ,, | 3 | ,, |
| 20 முதல் | 24 | ,, | ,, | 4 | ,, |

ஜகாத்துக் கொடுக்க வேண்டும்

மேற் சொன்ன ஆடுகள் செம்மறியாக இருப்பின் ஒரு (1) வயது பூர்த்தியானவைகளாக இருக்க வேண்டும். வெள்ளாடாக இருப்பின் இரண்டு (2) வயதும் பூர்த்தியடைந்தவைகளாக இருக்க வேண்டும். 24 (இருபத்திநான்கு) ஒட்டகைகளுக்கு அதிகமாக இருப்பின் ஒட்டகைகளையே கீழ்கண்ட அட்டவணைப்படி ஜகாத்துக் கொடுக்க வேண்டும். கொடுக்கக் கூடிய ஒட்டகைகளின் வயதுகள் ஒட்டகைகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு மாறுபடும்.

25 முதல் 35 ஒட்டகைகளுக்கு 1வயது நிறைந்த ஒட்டகைக் குட்டி 1

36 முதல் 45 வரையுள்ள ஒட்டகைகளுக்கு 2வயது குட்டி 1

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 46 | முதல் | 60 | ,, | ,, | 3வயது ,, | குட்டி | 1 |
| 61 | முதல் | 75 | ,, | ,, | 4வயது ,, | ,, | 1 |
| 76 | முதல் | 90 | ,, | ,, | 2வயது ,, | ,, | 2 |
| 91 | முதல் | 120 | ,, | ,, | 3வயது ,, | ,, | 2 |
| 121 | முதல் | 129 | ,, | ,, | 2வயது | ஒட்டகை | 3 |

கொடுக்க வேண்டும் அதைவிட அதிகரிக்கும் போது 130 முதல் அதற்கு மேலுள்ள ஒட்டகைகள் இருந்தால் கீழ்கண்ட முறைப்படி கணக்குப் பண்ணி அதன்படிக் கொடுக்க வேண்டும்.

**உதாரணமாக:-**

| | | | | |
|---|---|---|---|---|
| | 40 | ஒட்டகைகளுக்கு | 2வயது | ஒட்டகை 1 |
| | 90 | ,, | 2வயது | ,, 2 |
| ஆக | 130 | ,, | 2வயது | ,, 3 |

கொடுக்க வேண்டும்.

உதாரணமாக 140 ஒட்டகைகள் இருந்தால்

| | | | | |
|---|---|---|---|---|
| | 91 | ஒட்டகைகளுக்கு | 3வயது | ஒட்டகை 2 |
| | 49 | ,, | 2வயது | ,, 1 |
| ஆக | 140 | ,, | 3வயது ஒட்டகை | 2 |

இரண்டு வயது ஒட்டகை ஒன்றும் ஆக மூன்று ஒட்டகைகள் கொடுக்க வேண்டும். இவ்வாறே 140 ஒட்டகைகளுக்கும் மேலுள்ள எண்ணிக்கைகளுக் கெல்லாம் கணக்கு எடுத்துக் கொண்டு அதன்படி கொடுக்க வேண்டும்.

குறிப்பு:- ஒருவயது ஒட்டகைக் குட்டி பெண்ணாக இருப்பது மிகச் சிறந்தது.

## விவசாயத்தில் ஜகாத்து

அல்லாஹ் கூறுகிறான்:

قَالَ اللّٰهُ تَعَالٰى : يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اَنْفِقُوْا مِنْ
طَيِّبٰتِ مَا كَسَبْتُمْ وَمِمَّاۤ اَخْرَجْنَا لَكُمْ
مِّنَ الْاَرْضِ (٢ : ٢٦٧)

**தமிழாக்கம்:-**

ஈமான் கொண்டவர்களே! நீங்கள் சம்பாதிக்கும் ஹலாலான பொருள்களிலிருந்தும், பூமியிலிருந்து உங்களுக்காக வெளிப்படுத்தியதிலிருந்தும் தானதர்மமாகச் செலவு செய்யுங்கள்.

وَهُوَ الَّذِيْۤ اَنْشَاَ جَنّٰتٍ مَّعْرُوْشٰتٍ وَّغَيْرَ مَعْرُوْشٰتٍ
وَّالنَّخْلَ وَالزَّرْعَ مُخْتَلِفًا اُكُلُهٗ وَالزَّيْتُوْنَ
وَالرُّمَّانَ مُتَشَابِهًا وَّغَيْرَ مُتَشَابِهٍ ؕ كُلُوْا
مِنْ ثَمَرِهٖۤ اِذَاۤ اَثْمَرَ وَاٰتُوْا حَقَّهٗ يَوْمَ حَصَادِهٖ ۖ
وَلَا تُسْرِفُوْا ؕ اِنَّهٗ لَا يُحِبُّ الْمُسْرِفِيْنَ ۙ (٦:١٤١)

**தமிழாக்கம்:-**

மேலும் (திராட்சை போன்ற பந்தலின் மீது) படர விட்ட தோட்டங்களையும், இன்னும் படர விடப் படாதவைகளையும் இன்னும் பேரீத்த மரங்களையும், புசிக்க விதவிதமான (காய்கறிதானியங்கள் போன்றவை உருவாகும்) விவசாயத்தையும் (அதன் தோற்றத்தில்)

ஒன்று போலும் (சுவையில்) ஒன்று போல இல்லாததுமான (ஒலிவம்) ஜைத்தூனையும் மாதுளையையும் அவனே படைத்திருக்கிறான். ஆகவே அவை பருவ காலத்தில் பலன் தந்தால் அவற்றின் கனிகளிலிருந்து (தாராளமாக) புசியுங்கள், அவற்றை அறுவடை செய்யும் நாளில் (ஏழைகளுக்கு நன்றி செலுத்துவதற்காக) அதில் அதனுடைய பாகத்தையும் கொடுத்து விடுங்கள். இன்னும் (வீண்) விரயம் செய்யாதீர்கள். வீண்விரயம் செய்பவர்களை நிச்சயமாக அல்லாஹ் நேசிக்கமாட்டான். *(6-141)* மேற்கூறிய திருவசனத்திலிருந்து விவசாயு விளைச்சல் தானியங்களிலும் ஜகாத்து கொடுக்க வேண்டிய கடமையுள்ளது என்பதை நாம் அறிகிறோம். நாம் உணவுக்காக எடுத்துக் கொள்ளும் பொருள்களான அரிசி, கோதுமை, ராகி, கம்பு, சோளம் போன்ற அசல் தானிய வகைகளிலும், அவற்றின் துணை உணவுகளான பருப்பு, பாசிப்பயறு, மொச்சைப்பயறு, கொண்டக்கடலை, உளுந்து, போன்ற தானியங்களுக்கும் ஜகாத்துக் கொடுத்தாக வேண்டும். ஒருவருடம் பூர்த்தியாக வேண்டுமென்பதில்லை. மேற்படி விவசாயப் பொருட்கள் 5 (ஐந்து) (மூட்டை) வஸக்களை எத்திவிட்டால் ஜகாத்துக்கடமையாகி விடும். பத்தில் ஒன்றை (1/10)த் தனியாக எடுத்து அதைக் கொடுத்து ஜகாத்தை நிறைவேற்ற வேண்டும்.

ஒரு வஸக் (1) என்பது 60 ஸாஃகள் ஒரு ஸாஃ (صاع) என்பது 3200 கிலோ எனவே 5 வஸக் என்பது 5X60X3.200= 960 கிலோ இக்காலத்து அளவிற்குத் தோதாக இவ்வாறு கணக்கிட்டுக் கொண்டு ஜகாத்துக் கொடுத்துக் கொள்ளவும்.

**குறிப்பு:–** ஒரு ஸாஃ என்பது 3.200 கிலோ கிராம் என்பதாக கேரளாவில் 'மைத்தக் கேரளா" என்ற தரீகத் அமைப்பின் தீர்வாகும். ஈத்தம்பழம், திராட்சை பழங்களைத் தவிர ஏனைய மற்ற பழங்களுக்கு ஜகாத்துக் கிடையாது. அவ்வாறே காய் கறிகளுக்கும் வாசனைப் பொருட்களுக்கும் ஜகாத்துக் கிடையாது.

தானியங்களில் தொலி, உமி இவைகளை நீக்கி விட்டுத்தான் கணக்கிட்டு ஜகாத்துக் கொடுக்க வேண்டும். மேலும் மழை நீர் ஆற்று நீர் போன்ற இயற்கை நீர்ப்பாசனம் மூலம் விளைந்த விவசாயப் பொருட்களுக்குத் தான் 1/10 பத்தில் ஒன்று ஜகாத்துக் கொடுக்க வேணடும். மேற்படி இயற்கையாகக் கிடைக்கும் நீரை விவசாயத்திற்குப் பயன்படுத்தும் போது இடையில் ஏற்படும் சிறுசிறு செலவினங்களை கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. இயற்கை நீர் அல்லாமல் கிணறு வெட்டியோ, போரிங் போட்டு, மோட்டார் வைத்துப் பணம் செலவிட்டு வரும் விளை பொருட்களுக்கு இருபதில் ஒன்று 1/20 கொடுக்க வேண்டும்.

ஒரு முறை விவசாயம் செய்து அறுவடைச் செய்ய எட்டு மாதங்கள் ஆகின்றன என வைத்துக் கொண்டால், இந்த எட்டு மாதத்தில் பாதி நான்கு (4) மாதங்களுக்கு இயற்கை நீராலும் மீதி பாதி (4) நான்கு மாதங்களுக்கு செலவு செய்து நீர்பாய்ச்சி விளையும் பொருட்களில் 1/10 பத்தில் ஒன்றும் நான்கில் மூன்றும் ஆக (1/10X3/4)=40ல் மூன்றும் (3/40) எடுத்து ஜகாத்துக் கொடுக்க வேண்டும்.

இயற்கை நீர்ப்பாசனம் (6) ஆறு மாதங்களுக்கும், செலவு செய்து நீர் எடுத்து (2) இரண்டு மாதங்களுக்கும் பாய்ச்சப்பட்டு விளை பொருட்களுக்கு (7/80) எண்பதில் ஏழு பங்கு எடுத்துக் கொடுக்க வேண்டும். அதாவது, நீர் பாசனங்களிலுள்ள செலவினங்களை பொறுத்து விகிதாச்சாரப்படி ஜகாத்துக் கடமையாகிறது.

## பைத்துல்மாலில் ஜகாத்து

பொதுவாக பைத்துல் மாலுக்குச் சொந்தமான சொத்துக்களுக்கு ஜகாத்துக் கிடையாது. அவ்வாறே பொது பிரயோஜனத்தைக் கருதி மார்க்க ஆசிரியர்கள், ஏழைகள், பள்ளிவாசல் போன்ற பொது மக்கள் உபயோகத்திற்கென்று 'வக்பு' செய்யப்பட்ட இடங்களுக்கும் ஜகாத்துக் கிடையாது. புதையல் கிடைத்தால் 1/5 ஐந்தில் ஒன்று ஜகாத்துக் கொடுக்கவேண்டும். புதையலில் அம்பர் சேராது. அது கடல் அலையால் ஒதுக்கப்படும் வஸ்துவாகும். இந்தப் புதையல் அன்னிய மத ஆட்சிக்குட்பட்ட பூமியில் கிடைக்குமானால் தான் 1/5 ஐந்தில் ஒருபங்கு ஜகாத்துக் கொடுக்க வேண்டும்.

ஆனால் இஸ்லாமிய நாட்டுப் பூமியில் கிடைக்கும் புதையலுக்குச் சொல்லப்பட்ட ஜகாத்து விதிப்படி கொடுக்க வேண்டும். எதிரியின் பூமியில் பிறர் தவறவிட்டப் பொருளைப் பெற்றுக் கொண்டால், அதைப் பிறருக்கு அறிவித்து விடவேண்டும். அது எதிரிகளின் பூமியில் கிடைத்தாலும் அதற்கும் 1/5 ஐந்தில் ஒரு பங்கு ஜகாத்து உண்டு என பஸரி (ரஹ்)

அவர்கள் அறிவிக்கிறார்கள். புஹாரி ஹதீஸ் 1498 சுரங்கத்தில் எடுப்பவைகளுக்கு 2½ இரண்டரை விழுக்காடு ஜகாத்து உண்டு.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் யார் அல்லாஹ்வுக்காக தர்மம் செய்கின்றார்களோ அவர்கள் ஏழு (7) விதமான பலன்களை அடைந்து கொள்ளட்டும் என்பதாகக் கூறியுள்ளார்கள்

1. தர்மத்தால் பலாய் முஸீபத்துகள், ஆபத்துகள் முதலியவைகளை விட்டும் அபயம் பெறுவார்கள்.

2. தர்மத்தால் வியாதிகள் நீங்கி, அதிக ஆயுளைப் பெறுவார்கள்.

3. தர்மத்தால் தம் சொத்துக்களுக்கு அழிவை விட்டும் பாதுகாப்பு கிடைக்கும்.

4. தர்மத்தால் இறைவனின் கோபத்தைத் தடுத்துக் கொள்ளலாம்.

5. தர்மத்தால் நண்பர்கள், அன்பர்களுக்கு மத்தியில் பரஸ்பர நேசத்தை வளர்த்துக் கொள்ளலாம்.

6. தர்மத்தால் வன் நெஞ்சத்தைப் போக்கி இளகிய, இரக்கமுள்ள நெஞ்சத்தோடு வாழலாம்.

7. இரக்கமுள்ளவர் ஈருலகச் சீரும் சிறப்பையும் அடையலாம்.

குறிப்பு:- ஜகாத்து ( زكاة )க்கும் பொது தர்மத் ( الصدقة ) திற்கும் உள்ள முக்கிய வித்தியாசங்களாவன: -ஜகாத்து ( زكاة ) நம் பேரில் கட்டாயக் கடமையாக்கப்பட்டதாகும். ஆனால் பொது தர்மமான ( الصدقة ) சதக்கா கட்டாயக் கடமையல்ல.

தருமம் செய்தால் அல்லாஹ் அதற்குள்ள நற்கூலியைத் தரப் போதுமானவன். தருமம் செய்யாவிட்டால் அதற்கு அல்லாஹ் தண்டனை தருவதில்லை. ஆனால் ஜகாத்து ( زكوة ) கொடுக்காவிட்டால் அல்லாஹுத் தஆலாவிடம் அதற்குள்ள தண்டனை உண்டு.

மேலும் ஜகாத்தை அல்லாஹுத் தஆலா மேலே சொன்ன குறிப்பிட்ட நபர்களுக்கு மட்டிலுமே கொடுக்க வேண்டும். சதக்கா யாருக்கும் கொடுக்கலாம். அதற்கு இன்ன அளவு இவ்வளவு காலம் இருந்தாக வேண்டுமென்பதெல்லாம் கிடையாது. நம்மை அறியாமல் தீயவர்களுக்குக் கொடுத்து விட்டால் கூட அல்லாஹ் அதை ஏற்றுக் கொள்கிறான் என்பதற்கு ஸஹீஹ் புஹாரி 1421ம் ஹதீஸில் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிப்பதை கீழே பார்ப்போம். -முந்திய உம்மத்துக்களில் ஒருவர் நான் தருமம் கொடுக்கப் போகிறேன் என்றுக் கூறிக் கொண்டு இரவில் தருமத்துடன் வெளியே வந்து (தெரியாமல்) ஒரு திருடனிடம் கொடுத்து விட்டார். காலையில் மக்கள் இன்றிரவு திருடனுக்குத் தர்மம் கொடுக்கப்பட்டது எனப் பேசிக் கொண்டனர். இதைச் செவியுற்ற அவர் அல்லாஹ்வே உனக்கே சகல புகழும்; நாளையும் நான் தர்மம் செய்வேன் என்று கூறினார். மறு நாள் அவர் தர்மத்துடன் (இரவில்) வெளியே வந்து அதை ஓர் விபச்சாரியிடம் தெரியாது கொடுத்து விட்டார். மறு நாள் காலையில் மக்கள் இன்றிரவு விபச்சாரிக்கு தருமம் கொடுக்கப்பட்டுள்ளது எனப் பேசிக் கொண்டார்கள். (இதைக் கேட்ட) அந்நபர்

அல்லாஹ்வே விபச்சாரிக்கு தருமம் செய்ததற்காக உனக்கே சகல புகழும் (நாளையும்) நான் தர்மம் செய்வேன்" எனக் கூறினார். (மூன்றாம் நாள்) அவர் தருமத்துடன் வெளியே வந்து ஒரு பணக்காரனின் கையில் தெரியாது கொடுத்து விட்டார். காலையில் மக்கள் இன்று ஒரு பணக்காரருக்கு தர்மம் செய்யப்பட்டுள்ளது எனப் பேசிக் கொண்டார்கள். உடனே அவர் அல்லாஹ்வே திருடனிடமும், விபச்சாரியிடமும் செல்வந்தனிடமும் தர்மம் கொடுத்ததற்காக உனக்கே எல்லாப் புகழும் எனக் கூறினார்.

அப்போது ஒரு வானவர் அவரிடம் கனவில் தோன்றி நீர் திருடனுக்குக் கொடுத்த தர்மம் அவன் திருடுவதை விட்டும் திருந்தக் காரணமாகலாம். விபச்சாரிக்கு நீர் கொடுத்த தர்மம் அவள் விபச்சாரத்தை விட்டும் விடுபடக்காரணமாகலாம். செல்வந்தனுக்கு நீர் கொடுத்த தர்மமானது அவன் படிப்பினை பெற்று, அதனால் அவன் தனக்கு அல்லாஹ் வழங்கிய பொருளாதாரத்திலிருந்து தர்மம் செய்யக் கூடும் எனக் கூறினார்.

சதக்கத்துல் ஃபித்ரும் நம்மீது ஜகாத்தைப் போல் கடமை ( فرض ) யாக்கப்பட்டிருப்பதாக நாயகம் (ஸல்) அவர்கள் சொல்லியிருக்கின்றார்கள்.

இதுவும் சுதந்திரமான ஒவ்வொரு முஸ்லிமும் தனக்காகவும், (நபகா) தான் வாழ்வும், ஆதரவும் கொடுக்கக் கடமைப்பட்டவர்களான தாய், தந்தை, மனைவி, மக்கள், தமது வசமுள்ள அடிமை (முஸ்லிம்) முதலியவர்களுக்காகவும் கொடுக்கப்பட வேண்டிய

கட்டாயக் கடமை ( فَرْض ) ஆகும். இது பெருநாள் அன்று இரவு பகல் ஒரு நாளைக்குத் தனக்கு தான் (நபாகா) அன்பும் ஆதரவும் கொடுக்கக் கடமைப் பட்டவர் களுக்கும் கொடுக்க வேண்டிய கடனுக்கும், குடியிருப்பு வீடு, தேவையான வாகனம், தேவையான அடிமை (முஸ்லிம்) முதலியவைகளுக்குப் போதிய சிலவுத் தொகை போக, மீதப்பொருள் இருந்தால் நோன்புப் பெருநாள் வந்தவுடன் அவ்வூரில் அதிகமாக உணவுக்காக உபயோகிக்கப்படும் தானியத்தில் தம்குடும்பத்தினர் ஒவ்வொரு வருக்கும் (தலைக்கும்) ஒரு மரக்கால் வீதம் ஃபித்ரா என்று நிய்யத்து வைத்துக் கொண்டு கொடுப்பது ( فَرْض ) கட்டாயக் கடமை யாகும். நல்ல பழுதற்ற அரிசியாகக் கொடுக்க வேண்டும்.

ஃபித்ராவை ரமலான் மாத ஆரம்பத்திலிருந்தே கொடுக்க ஆரம்பிக்கலாம். நோன்புப் பெருநாள் தொழுகைக்குப்பின் கொடுப்பது பிற்படுத்துவது மக்ரூஹ் ஆகும். எனினும் தம் பந்துக்களில் ஒருவரை எதிர்பார்த்து, பிற்படுத்தலாம். ஆனால் பெருநாளை விட்டுப் பிற்படுத்துவது ஹராமாகும் ( حرام ) எப்படியும் நோன்பு பெருநாள் தொழுகைக்கு முன்னர் கொடுத்து விடுவது சாலச் சிறந்ததாகும்.

நம்மில் ஒருநபருக்கு அரிசியாக இருந்தால் உமி, தவிடு நீக்கி ஒரு மரக்கால் வீதமும், தீட்டாத கோதுமைக்கு (1/2) ஒரு சாஃ ( صاع ) அளவும், உலர்ந்த திராட்சைக்கு ஒரு சாஃ அளவும் தீட்டியக் கோதுமைக்கு 1/2 சாஃ ( صاع ) அளவும், நெல்லுக்கு இரண்டு (2) மரக்கால் அளவும் கொடுக்க வேண்டும். பேரீத்தம் பழத்திற்கு ஒரு சாஃ கொடுக்கவேண்டும்.

1 ஸாஃ ( صاع ) = 3.200 கிலோ

1 மரக்கால் = 4 இருகை அளவுதானியம்

1 மரக்கால் = 5½ இராத்தல்

பெருநாள் இரவில் பிறந்த குழந்தை, பெருநாள் இரவு திருமணம் செய்து கொண்ட மனைவி அன்றிரவு வாங்கிய அடிமை (முஸ்லிம்) முதலியவர்களுக்காகக் கொடுப்பதும் கடமை இல்லை. இந்த சதக்கத்துல் ஃபித்ரா'வை அவரவர்கள் வாழும் பகுதியிலுள்ள ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டும். கொடுப்பதற்கு விதியானவர் வெளியூரில் இருந்தால் அங்குள்ள ஏழைகளுக்குக் கொடுக்கலாம்.



*Printed at:*
**Mahin Printers,** Chennai - 600 001.
Phone: 5225143

# கடமையாக்கப்பட்ட தர்மமும் நன்கொடையும்



அல்ஹாஜ் டாக்டர்

**P.R.L. செய்கு அபூபக்கர் சாஹிப்**




*கிடைக்குமிடம் :*

**H. அக்பர் சுல்தான்,**

புதிய எண் 15/1,(7-A) காலேஜ் ரோடு,

நுங்கம்பாக்கம், சென்னை-600 006.

Tel: 8235851